

# பஞ்

எல்லாப் படிகளையும் இறங்கித் தெருவில் காலடி எடுத்து வைத்த பிறகுதான் லதாவுக்கு பஸ் சீஸன் டிக்கட்டை வீட்டிலேயே மறந்துவிட்டு வந்தது தெரிந்தது. இது பஸ்ஸில் ஏறின பிறகு தெரிய வந்தால் பேசாமல் டிக்கெட் வாங்கிக் கொண்டுவிட வேண்டியது தான். ஆனால் வீடு இன்னும் தொடும் தூரத்தில் இருக்கும் போதே சீஸன் டிக்கெட்டை எடுத்துச் செல்ல முயற்சி செய்யாமல் போவது நியாயமாகப் படவில்லை. அதே நேரத்தில் எழுபத்தைந்து காசு கொடுத்து ஒழித்து விட்டால் என்ன என்றும் தோன்றியது.

தெருவில் நின்றபடி குரலையும் அதிகம் எழுப்பாமல் ஆனால் மூன்றாவது மாடியில் காது கேட்கும்படியாகவும் யாரை யாவது கூப்பிட வேண்டும். கூப்பிட்டாலும் கேட்காது.

லதா ஒவ்வொரு மாடிப்படியாக ஏறினாள். மூன்று மாடிப் படிக்கட்டுகள். ஒவ்வொன்றிலும் பதினான்கு படிகள். பதினான்கு மூன்று நாற்பத்திரண்டு. நாற்பத்திரண்டு! இரண்டு நாலு ஆறு. ஆறு.... ஆறு...

லதாவுக்கு மூச்சிரைக்க ஆரம்பித்தது. சாப்பிட்டுக் கால் மணி நேரம் ஆவதற்குள் மூன்று முறை நாற்பத்திரண்டு படிகளை ஏறி இறங்க நேர்ந்திருக்கிறது. ரவிக்கை முதுகுப் பக்கம் முழுக்க நனைந்திருக்க வேண்டும்.

இப்படியாவது தன்னுடைய எடை குறைய வழியுண்டா? ஒவ்வொரு முறை பெண் பார்க்க வரும்போதும் லதாவுக்குச் செத்துப் பிழைத்த மாதிரிதான். வந்தவர்கள், பிற தகவல்களி லெல்லாம் திருப்தி அடைந்தவர்களாகக் காணப்படுபவர்கள், அவளைப் பார்த்தவுடன் திடீரென்று மாற்றம் அடைவார்கள். அவளும் புடவையை எப்படியெல்லாமோ தந்திரமாகக் கட்டிப் பார்த்து விட்டாள். மெல்லிய கோடுகள், நீளக்கோடுகள், அகல வாட்டில் கோடுகள், பெரிய கரை, சின்னக்கரை, இலேசான கலர்,

கருத்த வண்ணம். இப்போது இதெல்லாம் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை — பெண் கொஞ்சம் இரட்டை நாடி என்கிற பெயர் நிலைத்துப் போய் விட்டது. அவளுக்கு மிக நெருங்கின வர்களே அவளைப் பற்றி அடையாளம் கூற வேண்டியிருக்கும்போது வெகு இயல்பாகக் கொஞ்சம் குண்டாக இருப்பாங்களே, அந்த அம்மாதான் என்று சொல்கிறார்கள் என்பதை அவளால் ஊகித்துக் கொள்ள முடிந்தது.

தங்கள் போர்ஷனை அடைந்து பொத்தானை அழுத்தி னாள். அம்மா கதவைத் திறக்க, லதா உள்ளே ஓடிப்போய் பஸ் சீஸன் டிக்கட்டை எடுத்துக் கொண்டாள். கதவைப் போட்டுக் கொள் என்று கூடச் சொல்லாமல் கீழே இறங்க ஆரம்பித்தாள். இறங்குவதுதான் அவளுக்கு அதிகக் கவனம் தேவைப்படும் செ—யலாக இருந்தது. செருப்பு அறுந்து போவதும் இறங்கும் போதுதான் அதிகம் நேர்ந்திருக்கிறது. அவளைப் போன்ற உடல்வாகு பெற்றவர்கள் செருப்பு மட்டும் அடிக்கடி மாற்ற வேண்டும் என்றில்லை. புடவை, உள்பாவாடையும்தான்! அடிக்கடி கால் தடுக்கிக் கரையில் கிழிந்து விடுகின்றன. புடவை ஒல்லியாக இருப்பவர்களுக்காக ஏற்பட்ட உடை. அல்லது அவளைப் போன்ற வர்கள் புடவை கட்டிக் கொண்டு துணிக்கடைப் பொம்மை போல நடமாட்டம் ஏதுமில்லாமல் ஒரே இடத்தில் இருக்க வேண்டும். வெவ்வேறு உருவமுடைய ஆண்களுக்கு ஏற்றபடி உடை தைப்பது ஒரு விஞ்ஞானமாக வளர்ந்திருக்கிறது. அவர்கள் பாண்ட், ஸ்லாக்ஷர்ட் போட்டுக் கொண்டு தொந்தி தொப்பையை ஒளித்துக் கொண்டு விடுகிறார்கள். இப்போதெல்லாம் பெரிய நடிகர்கள் தவறாமல் டபிள் பிரஸ்ட் கோட் அணிந்து கொண்டுதான் கைதி கந்தசாமி வேஷம் அணிகிறார்கள்.

நெரிசல் நேரத்தில் பஸ் பயணம் செய்வது மனம் குன்றிப் போகும் இன்னொரு அனுபவம். பஸ்ஸில் உட்கார இடம் கிடைத்தாலும் அவள் இன்னொருவர் இடத்திலும் சிறிது பரவ வேண்டும். இதற்கு எதிர்ப்பு இல்லாமல் போவதில்லை. இந்திய பஸ்களே பஞ்சத்தில் அடிபட்டுச்சாகப் போகிறவர்களின் இறுதிப் பயணத்துக்காகத் தயார் செய்யப்பட்டவை போல உள்ளன.

லதாவுக்கு பஸ்களே குண்டுப் பெண்மணிகள் போலத்தான் தோற்றமளித்தன. ஒவ்வொரு பஸ்ஸும் ஒரு மாமியார். காலம் காலமாக மாமியார்கள் குண்டுக் கட்டையாக கொடுமை மிகுந்தவர்களாக, உஸ் புஸ்ஸென்று பெருமூச்சுவிட்டுக் கொண்டு இருப்பவர்களாகத்தான் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

குண்டு மாமியாரான பஸ்ஸினுள் நூற்றியேழு பயணிகளில் ஒருத்தியாக லதா நின்று கொண்டு பயணம் செய்து கொண்டிருந்தாள். இவ்வளவு கும்பலில் அவளைவிட உருவத்தில் மெலிந்து இருப்பவர்கள் கூட நசுங்கத்தான் வேண்டும். பொருளுக்கு நீள அகல உயரம் உண்டு. பொருள் அழிக்கக் கூடியதல்ல என்ற இலக்கணத்தோடு, பொருள் நசுக்கக் கூடியது என்ற இலக்கணத்தின் ஓர் உச்ச கட்டநிலை மாமியார் பஸ்களில் பயணம். உடல் தோற்றம் கல்யாணத்துக்கு முன்னால் ஏன் இவ்வளவு முக்கியமாக இருக்கிறது? முக்கால்வாசிப் பெண்கள் கல்யாணத்துக்குப் பிறகு ஒழுங்காகத் தலைவாரிப் பின்னிக் கொள்வது கூட இல்லை. உருவம் பற்றிச் சொல்ல வேண்டாம். கணவன் வருமானம் கூடுகிறதோ இல்லையோ இவர்கள் உருவம் கூடிவிடுகிறது. அதுவும் எப்படி? இனிமேல் என்னை யார் என்ன கேட்க முடியும் என்கிறது போன்ற அலட்சியம் பிரதிபலிக்கும் வகையில். இந்தக் கணவன்கள் இதே பெண்களை இப்போதிருக்கும் உருவத்தைக் கண்டு மணம் முடிக்கச் சம்மதிப்பார்களா? அதற்குப் பழி வாங்கத்தான் இப்படி ஊதிப் போய் விடுகிறார்கள் போலிருக்கிறது.

லதாவுக்கு உற்சாகமாக இருந்தது. தனிப்பட்ட முறையில் அவளாக அவளுக்கு இழைக்கப்படும் அநீதிகளுக்குப் பழிவாங்க முடியாவிட்டாலும் அவள் இனம் ஆண் வர்க்கத்தை இழிவு படுத்திக் கொண்டுதான் இருக்கிறது. 'நான் அழகாக இருந்தால் தான் கல்யாணம் பண்ணிக் கொள்வாயா, கல்யாணம் ஆனபிறகு உன் முகத்தில் எப்படிக் கரி பூசுகிறேன் பார்' என்று எக்காளம் பண்ணிக் கொண்டிருக்கிறது. ஆண் வர்க்கம் பெண் வர்க்கம் இரண்டும் ஒன்றையொன்று பழி தீர்த்துக் கொண்டும், இழிவு படுத்திக் கொண்டும் இருக்கின்றன. மனிதன் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலிருந்தே இப்படித்தானா? அல்லது மனைவி, குடும்பம், சமூகம் என்று ஏற்பட்ட பிறகா? நிச்சயமாகக் கல்யாணம் என்பதற்கு முக்கியத்துவம் புனிதத் தன்மையும் இல்லை என்று செய்துவிட்டால் இந்த ஆண் வர்க்கம் — பெண் வர்க்கம் போட்டா போட்டிக்கு அர்த்தமில்லாமல் போய்விடும்.

லதா பஸ்ஸில் தன்னைச் சுற்றி உட்கார்ந்து கொண்டும் நின்று கொண்டுமிருப்பவர்களைப் பார்த்தாள். இவர்கள் எல்லாரையும் ஒரே மாதிரிக் கவனத்துடன் பார்க்க முடியவில்லை. இருந்தாலும் இவ்வளவு ஆண்கள் பெண்களிடையில் திருமணம் இல்லாமல் தம்பதியாக வாழ எவ்வளவு பேர் தயார் என்று கேள்விக் கேட்டால் எத்தனை தயார்கள் கிடைக்கும்? அநேகமாக எல்லாரும் இது ஒரு ஹாஸ்யத் துணுக்கு என்பது போல் சிரிப்பார்கள். பதில்

சொல்லித்தான் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்தால் சங்கடமும் எரிச்சலும் வாரி இறைபடும். கல்யாணமாகாத குண்டுப் பெண் யாராவது இருந்தால் அவள் மட்டும் ஒரு கணம் தயங்குவாள்.

லதாவுக்கு ஆச்சரியம் மேலிட்டது. இந்த அழகு என்பது தான் என்ன? அவளும் பள்ளி—கல்லூரியில் படித்த பதினைந்து பதினாறு ஆண்டுகளில் எவ்வளவோ நூற்றுக்கணக்கான புத்தகங் களும் ஆயிரக்கணக்கான பாடங்களும் படித்திருப்பாள். அதில் இப்போது எவ்வளவு ஞாபகம் இருக்கிறது? ஆனால் அவற்றை ஞாபகம் வைத்திருப்பதை அளந்துதான் பரீட்சையில் மார்க் போட்டுப் பட்டம் தருகிறார்கள். பட்டத்துக்குப் பிறகு படித்த தெல்லாம் கரும்பலகையில் எழுதப்பட்ட எழுத்துப் போல அழிந்து போய் விடுகின்றன. அழகும் இந்தப் படிப்புப் போல ஏதோ ஒரு குறிக்கோளுக்காக — கல்யாணத்துக்காக — மட்டும் தானா? அதன் பிறகு அழகைக் கழற்றித் தூரப் போட்டு விடலாம், அப்படித்தானே?

லதாவுக்கு அவளைச் சுற்றியிருந்தவர்களில் எவ்வளவு பேரை அழகுடையவர்கள் என்று தேர்ந்தெடுக்க முடியும் என்ற சந்தேகம் எழுந்தது. அந்த நெரிசலில் யாருமே அழகைப் பாதுகாத்துக் கொள்ள முடியாதவர்களாகத்தான் தோன்றினார்கள். இதில் எவ்வளவு பேருக்குக் கல்யாணம் ஆகியிருக்கும்? சரி பாதி என்று கணக்கு வைத்துக் கொண்டால் இவர்கள் அழகின் உச்சக்கட்டப் பயனை அடைந்து விட்டு அதை அனாதரவாகக் கைவிட்டவர்கள். இன்னொரு பாதிப்பேருக்கு எதிர்காலம் ஒழுங்காக அமைய அழகு தேவை.

எது எப்படியோ, குண்டுப் பெண்ணாக இருந்தாலும் இன்னும் பெண் பார்க்க வருகிறார்கள். அவர்கள் என்னைப் பிடிக்கவில்லை என்று சொல்வதற்குப் பதிலாக நான் அந்த ஆண்களைப் பிடிக்க வில்லை என்று சொன்னால் என்ன? வருபவன் எவ்வளவு கருப்பாகவும் குட்டையாகவும் வழுக்கைத் தலையாகவும் ஒண்ணரைக் கண்ணனாகவும் இருந்தால்கூட நான் ஏன் அவனைப் பிடிக்கவில்லை, வேண்டாம் என்று சொன்னது கிடையாது? ஒரு வேளை எனக்கு ஒரு பாங்கிலோ, வெள்ளைக்காரக் கம்பெனியிலோ ஆயிரத்தியிருநூறு ரூபாய் சம்பளம் இருந்து 'மாக்ஸ் ஃபாக்டர்' மேக்கப் போட்டுக் கொள்பவளாக இருந்தால் என் தடிமன் அவ்வளவு தடிமனாகத் தென்படாது.

அந்த மார்வாடிப் பெண் ராதா பொத்து பொசுகு என்று இருந்தவள் புனாவுக்குச் சென்று ஒரு அழகு ஆசிரமத்தில் ஒரு மாதமாக இருந்து பாதியாக இளைத்து வந்தாள். அடுத்த மாதம் கல்யாணம். வழக்கம் போல மாப்பிள்ளை குதிரை மீது வருதல், இரண்டு வாத்தியக் கோஷ்டி, ஒரு விருந்து, ஒரு கோகோ கோலா... அடுத்த மாதம் ராதா பழையபடி ஆகிவிட்டாள். எப்படியும் கணவன் மீது பழிவாங்கலாம். இப்படித்தான் பழி வாங்க வேண்டும்.

பஸ் நின்று அந்த இடத்தில் இறங்க வேண்டியவர்களுடன் லதாவும் இறங்கினாள். பல நூற்றுக்கணக்கானவர்களுடன் அவளும் அந்த மாநில அரசு அலுவலகக் கட்டிடத்தினுள் அடைக்கலம் புகுந்தாள். பகல் இடைவேளையில் சென்று டிபன் சாப்பிட்டாள். இனி உடல் இளைக்க எந்த முயற்சியும் எடுப்பதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டாள். அவளை அடுத்த முறை பெண் பார்க்க வரப் போகிறவனை அவள் நேரடியாக 'உன்னைப் பிடிக்கவில்லை, போய் வா' என்று சொல்லி முடித்தவுடன் அவன் முகத்தில் எந்தப் பகுதி அதிகமாகக் கோணிக் கொள்ளும் என்று கற்பனை செய்து பார்ப்பதில் லயித்துப் போனாள்.

1982